# ஸதாசாராநு ஸந்தானம்

[தர்ம சாஸ்திரங்களில் ஆஸ்திகனான மனிதன் ஒருவன் பிரதி தினம் செய்ய வேண்டிய கடமைகளும் காரியங்களும் அவற்றின் முறைகளும் என்ன வென்று மிகவும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதுவே ஸதாசாரம் எனப்படும். ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைய பிரயத்தினம் செய்பவருக்கும் ஸதாசாரம் உண்டு; ஆனால் அது வேறு விதம் என்று இந்தப் பிரகரணத்தில் ஸ்ரீமத் ஆசார்யர் எடுத்துக் காட்டுகிறார். மா நஸிக பூஜை போல, இதுவும் கர்மேந்திரியாதிகளையும் வெளிப் பதார்த் தங்களையும் வைத்துக்கொண்டு அனுஷ்டிக்கப்படாமல் மனஸிலேயே அனுஸந்தானம் செய்யப்படவேண்டியது, என்று காட்டுகிறார். ஆராய்ந்து ஈடுபட்டுப் பின்பற்றுவதே அநுஸந்தானம்.]

**ஸச்சிதா$^{3}$நந்த$^{3}$ - கந்தா$^{3}$ய ஜக$^{3}$த்$^{3}$ங்குர - ஹேதவே |**
**ஸதோ$^{3}$தி$^{3}$தோய பூர்ணாய நமோ (அ)நந்தாய விஷ்ணவே ||** 1

ஸத்தாகவும் (மெய்ப்பொருளாகவும்) சித்தாகவும் (அறிவாகவும்) ஆனந்தமாகவும் உள்ள கிழங்காய், பிரபஞ்சம் எனும் இவ்வுலகம் முளைவிடக்காரணமாய், எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருப்பதாய், நிரம்பினதாய், எல்லையற்றதாய் உள்ள விஷ்ணுவுக்கு (ஸர்வ வியாபக வஸ்துவான ப்ரஹமத்துக்கு) நமஸ்காரம்.

**ஸர்வ - வேதா$^{3}$ந்த ஸித்$^{3}$தா$^{4}$ந்தைர் க்$^{3}$ரதி$^{2}$தம் நிர்மலம் சிவம் |**
**ஸதா$^{3}$சாரம் ப்ரவக்ஷ்யாமி யோகி$^{3}$நாம் ஞாநஸித்$^{3}$த$^{4}$யே ||** 2

(ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குரிய) யோக ஸாதனங்களை அனுஷ்டிக்கிறவர்களுக்கு ஞானம் ஸித்திக்கும் பொருட்டு எல்லா உபநிஷத்துக்களினாலும் தீர்மானிக்கப்பட்டிருக்கும் முடிவுகளைக்கொண்டு தொகுக்கப்பட்டதாயும், நிர்மலமாயும், சிவமாயுமுள்ள (மங்களமாயுள்ள) ஸதாசாரத்தைப்பற்றி நன்கு எடுத்துச்சொல்கிறேன். ((முதல் ச்லோகத்தில் விஷ்ணு என்ற சொல்லும். இரண்டாவதில் சிவ என்ற சொல்லும் ஆத்ம ஸாதகனுக்கு இருக்கவேண்டிய ஸமரஸ மனப்பான்மையைக் குறிப்பால் உணர்த்துகின்றன.)

**ப்ராத: ஸ்மராமி தே$^{3}$வஸ்ய ஸவிதுர் - ப$^{4}$ர்க$^{3}$: ஆத்மந: |**
**வரேண்யம் தத்$^{3}$ தி$^{4}$யோ யோ நச்சிதா$^{3}$நந்தே$^{2}$ ப்ரசோத$^{3}$யாத் ||** 3

எவர் நம்முடைய புத்திகளை, சித்தாகவும் ஆனந்தமாகவுமுள்ள (பிரஹ்மத்)தில் தூண்டிச்செலுத்துவாரோ, அந்த ஸ்வயம்பிரகாசமாயும் எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறவராயுமுள்ள ஆத்மஸ்வரூபியின் அப்பேர்ப்பட்ட சிலாக்கியமான பேரொளியைக் காலையில் ஸ்மரிக்கிறேன். (காயத்ரி மந்திரத்தையே பெரும்பாலும் அனுஸரிக்கும் ச்லோகம்)

**அந்வய - வ்யதிரேகாப்யாம் ஜாக்3ரத் - ஸ்வப்ந ஸுஷுப்திஷு ।**
**யதே3கம் கேவலம் ஞாநம் ததே3வாஸ்மி பரம் ப்3ருஹத் ॥** 4

விழிப்பு, கனவு, தூக்கம் இவைகளில் அன்வயத்தினாலும் வியதிரேகத்தினாலும் எது ஒன்றாய் தனித்து ஞானஸ்வரூபமாக இருக்கிறதோ, மேலான மிகப் பெரியதான அந்தப் பதார்த்தமாகவே நான் இருக்கிறேன்.

(ஒரு பதார்த்தம் இன்னொரு பதார்த்தத்துடன் பொருந்தி இருப்பதை அன்வயம் என்றும், ஒரு பதார்த்தம் இன்னொன்றுடன் பொருந்தமுடியாதிருப்பதை வ்யதிரேகம் என்றும் சொல்வார்கள். விழிப்பு இருக்கும் போது கனவும், தூக்கமும் கிடையாது, கனவு இருக்கும்போது விழிப்பும் நல்ல தூக்கமும் கிடையாது. நல்ல தூக்கம் இருக்கும் போது விழிப்பும் கனவும் கிடையாது. இவை ஒன்றுக்கொன்று வ்யதிரேகமாயிருந்தும் ஒரே ஜீவனில் இவை அன்வயிப்பதற்குக் காரணம் இம்மூன்று நிலைகளிலும் மாறாமலே உள்ள ஆத்மாதான் என்று புலப்படுகிறது.

**ஜ்ஞாநாஜ்ஞாந விலாஸோ (அ)யம் ஜ்ஞாநாத் ஜ்ஞாநே ச சாம்யதி ।**
**ஜ்ஞாநாஜ்ஞாநே பரித்யஜ்ய ஜ்ஞாநமேவாவசிஷ்யதே ॥** 5

அறிவு, அறியாமை என்ற இந்த இருவிதத் தோற்றமும் ஞானம் ஏற்பட்டவுடன் ஞானத்திலேயே அடங்கி விடுகிறது. அறிவு, அறியாமை இவ்விரண்டையும் விட்டு விட்டால் (ஸ்வரூபமான) ஞானம் மாத்திரம் மிஞ்சும்.

**அத்யந்த - மலிநோ தே3ஹோ தே3ஹீ சாத்யந்த - நிர்மலா: ।**
**அஸங்கோ3 (அ)ஹமிதி ஜ்ஞாத்வா சௌசமேதத் ப்ரசக்ஷதே ॥** 6

சரீரமானது மிகவும் அழுக்கடைந்தது. ஆத்மாவோ மிகவும் நிர்மலமானது. நான் சரீரத்துடன் எவ்வித ஸம்பந்தமும் அற்றவன் என்று அறிந்துகொள்வதுதான் ஞானிக்கு சௌசமென்பது.

(இங்கு ஆத்ம ஞானிக்கு சரீர சுத்தி என்ற சௌச ஆசாரத்தைக் கூறுகிறார்.)

**மந் - மநோ மீநவந் - நித்யம் க்ரீட3த்யாநந்த3 வாரிதெ4ள ।**
**ஸுஸ்நாதஸ் - தேந் பூதாத்மா ஸம்யக்3 - விஜ்ஞாந - வாரிணா ॥** 7

ஆனந்தமாகிற ஸமுத்திரத்தில், என்னுடைய மனஸ் மீனைப்போல எப்பொழுதும் விளையாடிக்கொண்டிருக்கிறது. அந்த (அதிலுள்ள) தெளிவான அறிவு என்கிற ஜலத்தினால் நன்கு ஸ்நானம் செய்தவனாக சுத்தம் செய்யப்பட்ட மனஸுடையவனாக இருக்கிறேன்.

**அதா3க4மர்ஷணம் குர்யாத் ப்ராணாபாந - நிரோத4த: ।**
**மந: பூர்ணே ஸமாதா4ய மக்3ந - கும்போ4 யதா2ர்ணவே ॥** 8

பிறகு ஸமுத்திரத்தில் மூழ்கின குடம் எப்படியோ (அது போல) பிராணன் அபானன் என்ற வாயு ஸஞ்சாரத்தையும் நிறுத்தி, மனஸை எங்கும் நிறைந்த ஆத்மா விடத்தில் நன்கு நிலை நிறுத்தி (முழுகப்பண்ணி), "அகமர்ஷணம்" என்ற ஆசாரத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

(ஸ்நாநம் செய்யும் பொழுது பாபத்தை நீக்கிக்கொள்ளும் பொருட்டு ஜபிக்கும் மந்திரமே அகமர்ஷணம்.)

**லய - விக்ஷேபயோ: ஸந்தெ$^{4}$ள மநஸ்தத்ர நிராமிஷம் |**
**ஸ ஸந்தி$^{4}$: ஸாதி$^{4}$தோ யேந ஸ முக்தோ நாத்ர ஸம்சய: ||** 9

லயமாகிற தூக்கத்திற்கும் விக்ஷேபமாகிற விழிப்புநிலையின் வெளிப்பார்வைக்கும் மத்தியில் மனஸ் இருந்தால் அந்த நிலையில் விஷய ஸுக அநுபோகமின்றி இருக்கும். அந்த (இரண்டும் அல்லாமல், இரண்டும் சேருமிடமான) ஸந்தியில் நிறுத்துவது எவனால் சாதிக்கப்பட்டிருக்கிறதோ, அவன் (ஸம்ஸார பந்தத்திலிருந்து) விடுதலை யடைந்த முக்தன். இந்த விஷயத்தில், ஸந்தேஹம் இல்லை.

(தூக்கத்தில் அமைதி இருந்தாலும் அறிவு இல்லை. விழிப்பில் அறிவு இருந்தாலும் அமைதி இல்லை. அமைதி, அறிவு இரண்டும் ஸந்திக்கப் பழகுவதே ஆத்ம ஸாதகனின் ஸந்தியாவந்தனம்.)

**ஸர்வத்ர ப்ராணினாம் தே$^{3}$ஹே ஜபோ ப$^{4}$வதி ஸர்வதா$^{3}$ |**
**ஹம்ஸ: ஸோ(அ)ஹமிதி ஜ்ஞாத்வா ஸர்வ - ப$^{3}$ந்தை$^{4}$ர் விமுச்யதே ||** 10

எல்லாப்பிராணிகளுடைய தேஹத்திலும், எப்பொழுதும் "ஹம்ஸ: ஸோஹம்" (ஸர்வ வியாபகமான பிரஹ்மமே நான்) என்ற ஜபமானது இருந்து வருகிறது; இதை அறிந்து கொண்டுவிட்டால் எல்லாக் க்ட்டுகளிலிருந்தும் நன்கு விடுபடுகிறான்.

பிராண ஸஞ்சாரமுள்ளவைகள் பிராணிகள். பிராண ஸஞ்சாரத்தில் காற்றை உள்ளேயிழுக்கும்போது "ஹம்" என்றும் வெளிவிடும் பொழுது "ஸ:" என்றும் தானாகவே சப்தம் ஏற்படுவதை கவனித்துப்பார்த்தால் நன்கு தெரியவரும். இது "ஹம்ஸ ரூபியான பிரம்மந்தான் நான்" என்று அர்த்தம் மேற்படக்கூடிய "ஹம்ஸ: ஸோ஽ஹம்" என்கிற சப்தமாக பரிணமிக்கிறது. நம்முடைய பிரயத்னம் இல்லாமல் நாம் மூச்சு விடுவதிலேயே ஆத்ம தத்த்வத்தை விளக்கக்கூடியதாக ஏற்பட்டுள்ள இந்த மந்திரத்தை நாம் முயன்று ஜபம் செய்யவேண்டிய அவசியமில்லாததால் இதற்கு "அஜபா" என்று பெயர். ஆத்ம ஞானிக்கு இதுவே ஜபமாகும். வேறு மந்திரங்களை அவன் ஜபிக்க வேண்டுவதில்லை.

**தர்பணம் ஸ்வஸுகே$^{2}$நைவ ஸ்வேந்த்$^{3}$ரியாணாம் ப்ரதர்பணம் |**
**மநஸா மந ஆலோக்ய ஸ்வயமாத்மா ப்ரகாசதே ||** 11

தன்னுடைய இந்திரியங்களுக்கு தன்னுடைய ஆத்மாநந்தத்தினாலேயே நன்கு திருப்தி செய்விப்பதுதான் ஆத்ம ஞானி செய்யவேண்டிய தர்ப்பணம். மனஸினால் மனஸை நன்கு பார்க்கையில் ஆத்மா தானாகவே பிரகாசிக்கும்.

தர்ப்பணம் என்றால் திருப்தி செய்வது. ஆத்ம ஞானிக்கு, தேவ ரிஷி பித்ரு தர்ப்பணமெல்லாம் வேண்டாமா என்றால், இந்திரியங்களைத் திருப்தி அடையும்படி செய்வதே அவன் செய்யும் தர்ப்பணமாகும். ஆனால் அந்தந்த இந்திரியங்கள் கேட்கும் வெளிப் பிரபஞ்சத்திலுள்ள விஷய இன்பங்களைக் கொடுத்து திருப்தி செய்யும் விதத்தில் அல்ல. ஆத்மானந்தத்தின் அனுபவத்திலேயே அவைகளை ஈடுபடும்படி செய்வதே சிறந்த தர்ப்பணமாகும்.

**ஆத்மநி ஸ்வப்ரகாசாக்³நௌ சித்தமேகாஹுதிம் க்ஷிபேத் |**
**அக்³நிஹோத்ரீ ஸ விஜ்ஞேயச் சேதரே நாமதா⁴ரகா: ||** 12

ஆத்மாவாகிற ஸ்வயம் பிரகாசமாயிருக்கும் அக்னியில் சித்தமாகிற ஒரே ஆஹுதியைப் போடவேண்டும். அவ்விதம் போடுகிறவனே மெய்யாலும் அக்னி ஹோத்திரம் செய்கிறவன் என்று அறிய வேண்டியது. (சடங்காகச் செய்யும்) மற்றவர் களோ (அக்னி ஹோத்ரீ என்ற பெயரைமாத்திரம் தரிக்கிறவர்கள்.

(இங்கு ஞானஸாதகன் செய்யும் அக்னிஹோத்ர ஆசரணை கூறப்படுகிறது).

**தே³ஹோ தே³வாலய: ப்ரோக்தோ தே³ஹீ தே³வோ நிரஞ்ஜந: |**
**அர்சித: ஸர்வபா⁴வேந ஸ்வா(அ)நுபூ⁴த்யா விராஜதே ||** 13

தேஹமானது பகவானுடைய ஆலயம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தேஹத் துக்குரியவன் (ஆத்மா) எவ்வித அழுக்குமில்லாத பகவான். (தேஹமான கோயிலில் உள்ள தெய்வமூர்த்தி ஆத்மாவே). எல்லாமாக யிருப்பது தானே என்ற அநுபவத்தாலே (இந்த மூர்த்தி) பூஜிக்கப்பட்டு நன்கு விளங்குகிறார்.

(இதுவே ஞானஸாதகனின் பூஜை).

**மௌநம் ஸ்வாத்⁴யயநம் த்⁴யாநம் த்⁴யேய ப்³ரஹ்மாநுசிந்தநம் |**
**ஜ்ஞாநே நேதி தயோ: ஸம்யஞ் - நிஷேதா⁴த் தத்த்வ த³ர்சநம் ||** 14

(ஆத்மஸாதகனுக்கு) ஸ்வயமாக ஏற்பட்ட (வேத) அத்யயனமென்பது மௌனமே. (அவனுக்கான) தியானம் (மற்றவர்கள் தமக்கு வேறாக ஒரு தெய்வத்தை தியானிப்பது போலின்றி) எல்லா தியானத்திற்கும் விஷயமான பிரஹ்மத்தைத் தொடர்ந்து சிந்தனம் செய்வதுதான். ஞானம் ஏற்பட்டுவிட்டால் இவ்விரண்டும் கூடக் கிடையாது என்று நன்கு தடுக்கப்பட்டிருப்பதால் (அந்நிலையில்) மெய்ப்பொருளின் அநுபவம் (மட்டுமே) உண்டு.

**அதீதாநாக3தம் கிஞ்சித் ந ஸ்மராமி ந சிந்தயே ।**
**ராக3 த்3வேஷௌ விநா ப்ராப்தம் பு4ஞ்ஜாம் - யத்ர சுபா4சுப4ம் ॥** 15

சென்றுபோனதையோ, இன்னும் வராமலிருப்பதையோ எதையும் நான் ஞாபகப் படுத்திக்கொள்வதில்லை, ஆலோசித்துப் பார்ப்பதுமில்லை. இப்பொழுது (நிகழ்காலத்தில்) (பிராரப்த கர்ம வசத்தினால்) கிடைக்கும் நல்லதையும் கெட்டதையும், ஆசையோ வெறுப்போ இல்லாமல் அனுபவிக்கிறேன்.

**தே3ஹாப்4யாஸோ ஹி ஸந்-ந்யாஸோ நைவ காஷாய வாஸஸா ।**
**நாஹம் தே3ஹோ (அஹமாத்மேதி நிச்சயோ ந்யாஸ லக்ஷணம் ॥** 16

தேஹ (சரீரம் நான் இல்லை. நான் இல்லை என்று அப்யாஸம் செய்வதல்லவா ஸந்யாஸம்? காஷாய வஸ்திரம் உடுப்பதினால் மாத்திரம் (ஸந்யாஸம்) ஆக மாட்டாது. "நான் தேஹம் அல்ல, நான் ஆத்மாவே" என்ற தீர்மானம்தான் ஸந்யாஸத்தின் லக்ஷணம்.

**அப4யம் ஸர்வ - பூ4தாநாம் தா3நமாஹுர் - மநீஷிண: ।**
**நிஜாநந்தே3 ஸ்ப்ருஹா நாந்யே வைராக்3யேஸ்யாவதி4ர் - மதா ॥** 17

ஸகல பிராணிகளுக்கும் அபயம் கொடுப்பதே ஸந்நியாஸி செய்யும் தானம் என்று, அறிவாளிகள் சொல்கிறார்கள். ஸ்வயமான ஆத்மானந்தத்தில் ஆசை, ஆத்மாவைத் தவிர்த்து வேறு பதார்த்தத்தில் ஆசையில்லாமலிருப்பது என்பது எதுவோ அதுவே, (அவனுக்குரிய) வைராக்கியத்தின் எல்லை என்று கருதப்பட்டிருக்கிறது.

இவ்விதம் வைராக்யாதி ஸாதனங்களை ஸம்பாதித்துக்கொண்டு ஸந்யாஸி யானவர் தகுந்த குருவைத் தேடி தத்த்வோபதேசம் பெறவேண்டும் என்று மேலே சொல்லுகிறார்.

**வேதா3ந்த ச்ரவணம் குர்யாத் மநநம் சோப்பத்திபி4 ।**
**யோகே3நாப்4யஸநம் நித்யம் ததோ த3ர்சநமாத்மந: ॥** 18

உபநிஷத்துக்களின் சிரவணத்தை (தாத்பர்யத்தைக் கேட்டுத் தெரிந்துகொள்வதை) செய்யவேண்டும். (சிரவணம் செய்ததை) நியாயமான யுக்திகளால் மனனம் (நன்கு ஆலோசிப்பது) செய்யவேண்டும். எப்பொழுதும், யோகம் எனும் ஒருமைப்பாட்டால் (சிரவண, மனனம் செய்ததை) திரும்பத்திரும்ப (உள் மனசில்) பயின்று கொண்டிருக்கவேண்டும். அதன் பிறகு (அதிலிருந்து) ஆத்மாவினுடைய ஸாக்ஷாத் காரம் (ஏற்படும்).

**சப்த சக்தோசிந்த்யத்வாத் சப்தா3தே3வாபரோக்ஷதீ4: ।**
**ப்ரஸுப்த: புருஷோ யத்3வத் சப்தே3நைவாவபு3த்3த்4யதே ॥** 19

சப்தத்தின் சக்தியானது மனஸினால் கூட நினைக்கமுடியாத பெருமையுள்ளதால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் சப்தத்தினால்தான் (ஏற்படுகிறது). எதுபோலவெனில் நன்கு தூங்குகிற மனிதன் சப்தத்தினாலேயே விழித்துக்கொள்வது போல.

**ஆத்மாநாத்ம விவேகேந ஜ்ஞாநம் ப4வதி நிச்சலம் |**
**கு3ருணா போ3தி4த: சிஷ்ய: சப்த3 ப்3ரஹ்மாதிவர்ததே ||** 20

ஆத்மா எது, அநாத்மா எது, என்ற பகுத்தறிவினால் அசைக்கமுடியாத ஞான மானது ஏற்படுகிறது. குருவினால் உபதேசிக்கப்பட்ட சிஷ்யன் சப்தரூபமான பிரஹ்மத்தைத் தாண்டிவிடுகிறான்.

(இதன்பின் குரு செய்யும் உபதேசம் கூறப்படுகிறது).

**ந த்வம் தே3ஹோ நேந்த்3ரியாணி ந ப்ராணோ ந மநோ ந தீ4: |**
**விகாரித்வாத்3 - விநாசித்வாத்3-த்3ருக்யத்வாச்ச க4டோ யதா2 ||** 21

நீ தேஹம் அல்ல, இந்திரியங்கள் அல்ல, பிராணன் அல்ல, மனஸ் அல்ல, புத்தி அல்ல. இவையெல்லாம் மாறுதலடையும் தன்மையுள்ளதாலும், நாசத்தையடையும் தன்மையுள்ளதாலும், பார்க்கப்படும் (ஞானத்திற்கு விஷயமாயிருக்கும்) தன்மையுள்ள தாலும் குடம் எப்படியோ அப்படியேதான். (நீ இவை அல்ல).

தேஹம் முதல் புத்தி வரையுள்ளவைகளை நாம் ஆத்மாவென்று நினைக்கிறோம்; அது தவறு. அவை யாவும் மாறிக்கொண்டும், நசித்துக்கொண்டும், அறியும் பொரு ளாகவும் இருப்பதால், எவ்வித மாறுதலுமற்று ஏகரூபமாய், நாசமற்று, சாசுவதமாய், அறியப்படாமல் சுத்த அறிவு ஸ்வரூபமாயுள்ள ஆத்மாவாக இருக்கமுடியாது. மண்ணிலிருந்து குடம் போல, இவை ஆத்மாவிலிருந்து உண்டானவையே. குடமானது மாறுகிறது, அறியப்படுகிறது, அழிகிறது. இவற்றின் போதும் ஆதாரமான மண்ணோ உள்ளபடியே உள்ளது. ஆத்மா இது போன்றதே.

**விசுத்3த4ம் கேவலம் ஜ்ஞாநம் நிர்விசேஷம் நிரஞ்ஜநம் |**
**யதே3கம் பரமாநந்த3ம் தத் த்வமஸ்யத்3வயம் பரம் ||** 22

நன்கு சுத்தமாய், தனித்து ஞானஸ்வரூபமாய், எவ்வித விசேஷமும் அற்றதாய், எந்தவித தோஷமும் அற்றதாய், ஒன்றாய், மேலான ஆனந்த ஸ்வரூபமாய், இரண்டற்று
உள்ள உத்கிருஷ்டமான வஸ்து எதுவோ அதுவே நீ.

**சப்3த3ஸ்யாத்3யேந்தயோ: ஸித்3த4ம் மநஸோ(அ)பி ததை2வ ச |**
**மத்4யே ஸாக்ஷிதயா நித்யம் ததே3வ த்வம் ப்4ரமம் ஜஹி ||** 23

சப்தத்தினுடைய ஆதியிலும் முடிவிலும், அப்படியே மனஸினுடைய ஆதியிலும் முடிவிலும் ஸித்தமாயும் நடுவில் (சப்தத்தையும் மனஸையும்) பார்த்துக்கொண்டிருக்கும் தன்மையோடும் எப்பொழுதும் எது இருக்கிறதோ அதுவேதான் நீ. (தேஹ, மனங்களையே 'நான்' என்றெண்ணும்) பிரமையை விட்டுவிடு.

**ஸ்தூ²ல-வைராஜயோரைக்யம் ஸூக்ஷ்ம-ஹைரண்ய க³ர்ப⁴யோ: |**
**அஜ்ஞான-மாயயோரைக்யம் ப்ரத்யக்³-விஜ்ஞான பூர்ணயோ: ||** 24

ஸ்தூலத்திற்கும் (ஸ்தூல சரீராபிமானியான விசுவனுக்கும்) விராட்டுக்கும் அபேதம். ஸூக்ஷ்மத்திற்கும் (ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸனுக்கும்) ஹிரண்ய கர்ப்பருக்கும் அபேதம். (பிராஜ்ஞனுக்கு உபாதியான) அஞ்ஞானத்திற்கும் (ஈசுவரனுக்கு உபாதியான) மாயைக்கும் அபேதம். (நான்காவதாய் உபாதியற்றதாயுள்ள) பிரத்யகாத்மாவுக்கும் பரிபூர்ணமான பிரஹ்மத்திற்கும் அபேதம்.

(விழிப்பு நிலையிலுள்ள ஸ்தூல பிரபஞ்சத்தை உபாதியாகக்கொண்ட விராட் என்பவரும் அதிலடங்கிய ஸ்தூல சரீரத்தை மட்டும் நான் என்று நினைக்கிற விசுவன் என்பவனும் ஒன்று. கனவு நிலையிலுள்ள ஸூக்ஷ்ம பிரபஞ்சத்தை உபாதியாகக்கொண்ட ஹிரண்ய கர்ப்பர் என்பவரும் அதிலடங்கிய ஸூக்ஷ்ம சரீரத்தை மட்டும் நான் என்று பாவிக்கிற மாயிருக்கிற வியாபகமான மாயையை உபாதியாகக் கொண்ட ஈசுவரன் என்பவரும் அதில் அடங்கிய சிறியதான அவித்யையை மட்டும் உபாதியாகக்கொண்ட (கனவற்ற தூக்கநிலையிலுள்ள) பிராக்ஞன் என்பவனும் ஒன்று. விராட், ஹிரண்யகர்பர், ஈசுவரன் என்ற உபாதிகளோடு கூடிய மூன்று தத்துவங்களையும் வியாபித்துக்கொண்டு அவ்வுபாதிகளால் பாதிக்கப்படாமல் இருந்துவரும் சுத்த சைதன்ய ஸ்வரூபமான பரப்பிரஹ்மமும், விசுவன், தைஜஸன், பிராஜ்ஞன் என்ற உபாதிகளோடு கூடிய மூன்று ஜீவகலைகளையும் வியாபித்துக்கொண்டு அவ்வுபாதிகளால் பாதிக்கப்படாமல் இருந்துவரும் சுத்தசைதன்ய ஸ்வரூபியுமான (ஜீவாத்மா என்று பொதுவிலே சொல்லப்படும்) பிரத்யகாத்மாவும் ஒன்றே.

**சிந்மாத்ரைக ரஸே விஷ்ணௌ ப்3ரஹ்மாத்மைக்ய ஸ்வரூபகே |**
**ப்⁴ரமேணைவ ஜகஜ்ஜாதம் ரஜ்ஜ்வாம் ஸர்ப்ப ப்⁴ரமோ யதா² ||** 25

கயிற்றில், பாம்பு என்கிற பிரமம் எப்படி (ஏற்படுகிறதோ அப்படியேதான்), பிரமத்தினாலேயே, சுத்த ஞானஸ்வரூபமாய் ஒரேவிதமாய், வியாபகமாய், பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்பதையே ஸ்வரூபமாயுள்ள பரமாத்மாவினிடத்தில், பிரமையினாலேயே ஜகத்தானது உண்டாயிருக்கிறது.

[ஒன்றாக இருக்கிற பதார்த்தத்தில் அதைவிட வேறாக இன்னொன்று இருப்பதாகத் தோன்ற முடியுமா என்கிற ஸந்தேஹத்தை நிவர்த்திப்பதற்காக, கயிறு

பாம்பு திருஷ்டாந் தம். கயிறு மாத்திரம் இருக்கும்போது கயிற்றையே பாம்பாக பிரமையில் நினைப்பதால் கயிறில்லாத பாம்பு தோன்றவில்லையா? அதேபோல் வாஸ்தவத்தில் ஆத்மா ஒன்றே இருக்கையில் ஜகத் இருப்பதாகத் தோன்றலாம். ஆனால் அந்தத் தோற்றம் பிரமமேயாகும், வாஸ்தவமல்ல].

**தார்கிகாணாம் து ஜீவேசௌ வாச்யாவேதௌ விது³ர்பு³தா⁴: |**
**லக்ஷ்யௌ ச ஸாங்க்²ய யோகா³ப்⁴யாம் வேதா³ந்தைரேகதா தயோ: ||** 26

தார்க்கிகர்களின் மத (தர்க்கசாஸ்திர)த்தில், ஜீவர்களும் ஈச்வரனும் வாசயர்கள்தான் (என்று) அறிவாளிகள் அறிந்து கொண்டிருக்கிறார்கள். ஸாங்க்யர் களுக்கும் யோகிகளுக்கும் (ஜீவ, ஈச்வரர்) லக்ஷயர்களே. வேதாந்தமெனும் உபநிஷத் ரீதியில் அவ்விருவர்களுக்கும் ஐக்கியமே.

[பரமாத்மா ஒன்றேதான், அதுதான் நீ, என்று சொன்னால், "ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யும் ஈச்வரன் வேறு, அவரால் ஆளப்படும் நான் வேறு, என்று நன்கு தெரிகிறதே; அதற்கு என்ன ஸமாதானம்?" என்று கேட்கத் தோன்றும். இந்த ஸந்தேஹம் ஏற்படுவதற்கே காரணம் ஜீவன், ஈசுவரன் இவர்களுடைய தத்துவத்தை நன்கு அறியாததுதான். இவ்விருவர்களுடைய தத்துவத்தைப்பற்றி நியாயம் (தர்க்கம்) ஸாங்க்யம், யோகம் முதலான எல்லா தர்சனகாரர்களும் விசாரித்திருக்கிறார்கள். ஸாதாரணமாக உலகத்தில் சரீராதிகளோடு இருந்துகொண்டு பாவ புண்யங்களைச் செய்துகொண்டு அவைகளின் பலன்களை அனுபவித்துக்கொண்டு ஈசுவரனுடைய ஆளுகைக்குக் கட்டுப்பட்டு சிறியவனாய் அல்ப ஞானத்தோடு, அல்ப சக்தியோடு இருப்பவனே ஜீவன். ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து பரிபாலித்து ஸம்ஹரித்து வருபவராய் ஜீவர்களை நியமனம் செய்து அவரவர்கள் புண்ணிய பாபங்களுக்குத் தக்கபடி சுகதுக்க அனுபவங்களைக் கொடுத்துக் கொண்டு ஸர்வக்ஞனாய், ஸர்வ சக்தனாய், ஸர்வ வியாபகனாய் இருப்பவனே ஈசுவரன். இப்படித்தான் நியாய சித்தாந்திகளான தார்க்கிகர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இதன்படி ஜீவனும், ஈசுவரனும் என்றும் வேறுபட்டவர்களே, ஒரு நாளும் ஒன்றாக ஆகமாட்டார்கள். ஸாங்க்யர்கள் ஜீவ தத்வத்தைப்பற்றி விசாரிக்கும் போது அதன் நிஜஸ்வரூபத்தில் சரீராதிகளோ, ஸுகதுக்கங்களோ சேர்ந்தவையல்ல என்றும், அநாத்மாவான பிரகிருதியின் ஸம்பந்தத்தினால்தான் இவை ஆத்மாவில் இருப்பதாகத் தோன்றுகின்றன என்றும் வாஸ்தவத்தில் ஆத்மா சுத்தமான சைதன்ய ஸ்வரூபம் தான் என்றும், ஆனால் இந்த சுத்த சைதன்ய ஸ்வரூபம் ஒவ்வொரு ஜீவனுக்கும் தனித்தனியென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். யோகதர்சனத்திலும் இவ் விதமே ஜீவனுடைய தன்மையைச் சொல்லிவிட்டு அந்த ஜீவர்களுக்குள் ஸர்வக்ஞனாய் இதர ஜீவர்களால் உபாஸிக்கத் தகுந்தவனாய் இருப்பவன் ஈசுவரன் என்று சொல்கிறார்கள். இவ்விரு மதங்களிலும் ஜீவர்களுக்குள்ளேயோ ஈசுவரனுக்கோ தனித்தனி சைதன்யம் ஒப்புக்கொள்ளப்படுகிறபடியால் ஜீவனும் ஈச்வரனும் என்றைக்கும் வெவ்வேறுதான். வேற்றுமையை உண்டாக்கக்கூடிய அம்சங்கள் எல்லாம் அனாத்மாவை சேர்ந்தபடியால் அவ்வம்சங்களை எல்லாம் விலக்கிப்பார்க்கும்போது ஜீவன், ஈசுவரன் இருவருமே சுத்த சைதன்யமென்று

ஏற்படும். அந்த நிலையில் வித்யாஸத்திற்கு இடமில்லாததினால் இருவரும் வாஸ்தவத்தில் ஒன்றேதான் என்பது உபநிஷத்துக்களைப் பிரமாணமாகக் கொண்ட (அத்வைத) வேதாந்திகளின் தீர்மானம்.

உபாதிகளுடன் சேர்த்துப்பார்க்கும் போது வாச்யார்த்தம் என்றும், உபாதிகளை விலக்கிப்பார்க்கும் போது லக்ஷ்யார்த்தம் என்றும், வாச்யார்த்தத்தில் தோன்றும் வேற்றுமையையும் விலக்கிவிட்டால் ஐக்கியமே என்றும், இந்தச் சுலோகத்தில் சொல்லப்பட்டது.

மேற்கொண்டு உபநிஷத்துக்கள் காட்டும் ஜீவ-ஈசுவர ஐக்கியத்தை நிரூபணம் செய்கிறார்: -

**கார்ய காரண வாச்யாம்சௌ ஜீவேசோர் யௌ ஜஹச்ச தௌ |**
**அஜஹச்ச தயோர் - லக்ஷயௌ சித3ம்சாவேகரூபிணௌ ||** **27**

ஜீவனிடத்திலும் ஈசுவரனிடத்திலும் உள்ள அந்தக்கரணம், மாயை என்னும் வாச்யார்த்தத்தின் அம்சங்களை விட்டும், அவ்விரண்டுகளின் லக்ஷ்யங்களான சைதன் யாம்சங்களை விடாமலும் இருந்தால் (ஜீவனும் ஈச்வரனும்) ஒரே ஸ்வரூபமாக ஆகின்றனர்.

ஜீவ ஸ்வரூபத்திலுள்ள கார்ய ரூபமான அந்தக்கரணம் என்னும் வாச்யார்த்தத்தின் அம்சத்தையும் ஈசுவர ஸ்வரூபத்திலுள்ள காரண ரூபமான மாயை என்னும் வாச் யார்த்தத்தின் அம்சத்தையும் விட்டு விட்டு இரண்டிலும் லக்ஷ்யாம்சமான சைதன்யத்தை விடாமல் இருந்தால் இரண்டிலும் உள்ள சைதன்யம் ஒரே ரூபமாயிருப்பதால் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் ஐக்யம் ஸித்திக்கிறது.

கார்யம் என்பது அந்தக்கரணம்; அத்துடன் கூடியவன் ஜீவன். காரணம் என்பது மாயை; அத்துடன் கூடியவன் ஈசுவரன்.

**கர்ம சாஸ்த்ரே குதோ ஜ்ஞானம் தர்கே நைவாஸ்தி நிச்சய: |**
**ஸாங்க்2ய - யோகெ3ள பி4தா3பந்நௌ சாப்3தி3கா: சப்த-தத்பரா: ||** **28**

கர்மாவை போதிக்கும் (மீமாம்ஸா) சாஸ்திரத்தில் எப்படி ஞானம் (ஏற்படும்)? (அதோடு சேர்ந்த) தர்க்க சாஸ்திரத்தில் (ஞான விஷயத்தில்) தீர்மானமானது கிடையவே கிடையாது. ஸாங்க்ய சாஸ்திரமும் யோக சாஸ்திரமும் வேற்றுமையை ஒப்புக்கொண்டவை. சப்த விஷயமான (வியாகரண) சாஸ்திரத்தை அனுஸரிப்பவர்கள், சப்தத்திலேயே - ஈடுப்ட்டவர்கள். (எனவே இந்த தரிசனங்களில் எதுவும் ஆத்ம ஞானத்துக்கு உதவாது.)

[ஆத்மாவை கர்த்தா என்றும் போக்தா என்றும் ஒப்புக்கொண்டால்தான் அவனைப்பார்த்து "இதைச் செய், இந்த பலனை அடைவாய்" என்று சொல்லமுடியும். அவ்விதம் கட்டளையிடும் சாஸ்திரம் மூலம் கர்த்தாவும் போக்தாவுமல்லாத சுத்த சைதன்ய ரூபமான ஆத்மாவின் ஞானம் ஏற்படுவதற்கு இடமேயில்லை. தர்க்கத்தை எடுத்துக் கொண்டால் ஒருவன் தன் யுக்தியினால் ஒருவிதமாகத் தீர்மானம் செய்தாலும் அவனுக்கு மேல் புத்திசாலியாயுள்ள மற்றொருவன் அந்தத் தீர்மானம் யுக்திக்குப் பொருந்தாது என்று காட்டிவிட முடியும். ஆகையால் தர்க்க சாஸ்திரத்தின் உதவியைக்கொண்டு மாற்றமுடியாத ஒரு முடிவிற்கு வருவது ஸாத்தியமாகாது. ஸாங்க்யமும் யோகமும் முன் சொன்னபடி ஜீவனும் ஈசுவானும் வெவ்வேறு என்றே வைத்துக்கொண்டிருப்பதால் இவ்விருவர்களும் அபேதத்தை போதிக்கமுடியாது. சப்தசாஸ்திரத்தில் ஈடுபட்டவர்கள் வார்த்தைகளுடைய வ்யுத்பத்தியுடன் நின்றுவிடுவார்களே தவிர, அர்த்த விசாரத்தில் இறங்குவதில்லை. ஆகவே இந்த சாஸ்திரங்கள் மூலம் அபேத ஞானத்தை அடைய முடியாது].

**அந்யே பாஷண்டி[3]ந: ஸர்வே ஜ்ஞாநவார்தா ஸுது[3]ர்லபா[4]: |**
**ஏகம் வேதா[3]ந்த விஜ்ஞாநம் ஸ்வாநுபூ[4]த்யா விராஜதே ||** 29

மற்ற எல்லாரும் பாஷண்டிகள். அவர்களுக்கு ஞானம் என்ற பேச்சே வெகு துர்லபம். வேதாந்தத்தினால் அறியப்படும் ஞானம் ஒன்றுதான் தனக்கு ஸ்வயமாய் ஏற்படும் அனுபவத்திற்கு விஷயமாகிப் பிரகாசிக்கிறது.

[இதுவரை சொன்ன ஸித்தாந்திகள் வேதம் பிரமாணம் என்று ஒப்புக்கொள்ளும் ஆஸ்திகர்களே. இவர்களே ஜீவேசுவர ஐக்கிய ஞானத்தை அடைய முடியாதென்றால், வேத மதத்திற்குப் புறம்பான மார்க்கங்களில் இருந்து வருகிறவர்களுக்கு இந்த ஞானம் வெகு துர்லபமேயாகும். ஆகவே வேதாந்தம் மூலம்தான் ஐக்ய ஞானம் உண்டாகும். அதுதான் ஸ்வானுபவத்துடன் விளங்குவது].

இவ்விதம் வேதாந்தத்தினால் போதிக்கப்பட்டு ஸ்வானுபவத்தினால் ஸாக்ஷாத்கரிக்கப்படும் ஞானத்தின் ஸ்வரூபம் மேல் சுலோகங்களில் விவரிக்கப்படுகிறது.

**அஹம் மமேத்யயம் ப[3]ந்தோ[4] மமாஹம் நேதி முக்ததா |**
**ப[3]ந்த[4]மோக்ஷௌ கு[3]ணைர்-பா[4]தோ கு[3]ணா: ப்ரக்ருதி-ஸம்ப[4]வா: ||** 30

நான், என்னுடையது என்ற எண்ணமே (அதாவது, அநாத்மாவான தேஹாதிகளை நான் என எண்ணும் அஞ்ஞானமே) பந்தமாகும். என்னுடையது, நான் ஆகிய இரண்டும் இல்லை என்றால், அதுவே விடுபட்ட முக்தநிலையாகும். பந்தமும் மோக்ஷமும் குணங்களினால்தான் தோன்றுகின்றன. அந்த குணங்கள் பிரகிருதியினால் ஏற்பட்டவை.

**ஜ்ஞாநமேகம் ஸதா³ பா⁴தி ஸர்வாவஸ்தா³ஸ நிர்மலம் ।**
**மந்த³பா⁴க்³யோ ந ஜாநந்தி ஸ்வரூபம் கேவலம் ப்³ருஹத் ॥** 31

ஞானமானது ஒரே விதமாய் நிர்மலமாய் எல்லா நிலைகளிலும் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. (இவ்விதம் பிரகாசிக்கிற) மஹத்தான தன்னுடைய ஸ்வரூபத்தை மட்டும் பாக்யமில்லாதவர்கள் அறிகிறதில்லை.

**ஸங்கல்ப ஸாக்ஷி யத் ஜ்ஞாநம் ஸர்வலோகைக ஜீவநம் ।**
**ததே³வாஸ்மீதி யோ வேத3 ஸ முக்தோ நாத்ர ஸம்சய: ॥** 32

மனசில் தோன்றும் எண்ணங்களையெல்லாம் ஸாக்ஷியாயிருந்து அறிந்து கொண்டு எல்லா பிராணிகளும் ஜீவிப்பதற்கு ஒரே காரணமாக இருக்கின்ற ஞான ஸ்வரூபமான ஆத்மாவாகவே நான் இருக்கிறேன் என்று அறிகிறவனே விடுபட்ட முக்தன். இந்த விஷயத்தில் சந்தேஹமே கிடையாது.

**ப்ரமாதா ச ப்ரமாணம் ச ப்ரமேயம் ப்ரமிதிஸ்-ததா² ।**
**யஸ்ய பா⁴ஸா (அ)வபா⁴ஸந்தே மாநம் ஜ்ஞாநாய தஸ்ய கிம் ॥** 33

அறிகிறவனும், அறிவின் ஸாதனமும், அறியப்படும் விஷயமும், அப்படியே, அறிகிறதென்ற புத்தியின் விருத்தியும் எவருடைய பிரகாசத்தினால் பிரகாசிக்கின்றனவோ, அவருடைய ஞானத்தை உத்தேசித்து (அதாவது அவரை அறியக்கூடிய) அறிவின் சாதனம் என்ன இருக்கமுடியும்? (எதுவும் இருக்க முடியாது).

**அர்தா²காரா ப⁴வேத்-வ்ருத்தி: ப²லேநார்த²: ப்ரகாசதே ।**
**அர்த²ஜ்ஞாநம் விஜாநாதி ஸ ஏவார்த²: ப்ரகாசதே ॥** 34

புத்தியினுடைய விருத்தியானது (விஷயத்தை நோக்கிச்சென்று) விஷயத்தின் ஆகாரத்தை (டிவத்தையே எடுத்துக்கொண்டதாக ஆகும். சைதன்யத்தால் விஷயமானது தெரிகிறது. விஷய ஞானமானது தனக்கு ஏற்பட்டிருக்கிறதென்பதை நன்கு அறிகிறான். விஷயம் பிரகாசிக்கிறது என்பது அதுவே தான்.

நாம் எத்தனையோ பொருள்களைப் பார்த்துத் தெரிந்து கொள்கிறோம். உதாரண மாக குடம் என்ற அறிவு நமக்கு எப்படி ஏற்படுகிறது என்று பார்ப்போம். நாம் கண்ணால் ஒரு குடத்தைப் பார்த்ததும் நம்முள் இருக்கிற மனமானது கண்வழியாக வெளியில் சூரிய கிரணம் போல் நீண்டு சென்று குடத்தை வியாபித்து குடத்தின் உருவத்தை அடைந்து விடுகிறது. நதியிலுள்ள நீர் வாய்க்கால் வழியாகச் சென்று வயலை அடைந்து வயல் முழுவதும் பரவி வயலின் வடிவத்தை அடைந்து விடுகிறதல்லவா! இப்படி விஷயாகாரத்தை அந்தக்கரணம் அடைவதைத்தான் அந்தக்கரண விருத்தி என்று சொல்கிறார் கள். இந்த விருத்தியினால் ஆவரணம் அதாவது மறைவு (குடம் முதலியவை நமக்குத் தெரியாமலிருந்த நிலை)

நீங்குகிறது. அதன் பிறகு ப்ரகாசரூபமான சைதன்யத்தால் குடம் நமக்குத் தெரியவருகிறது.'இது குடம்'என்று சொல்கிறோம். குடத்தை நான் அறிகிறேன் என்று சொல்கிறோம். இதுவே " பல வியாப்தி'அல்லது "சைதன்ய வியாப்தி'". இது போலவேதான் எல்லா விஷயங்களிலும். இதுதான் விஷயத்தை அறிந்து கொள்வது என்பது.

**வருத்தி-வ்யாப்யத்வ-மேவாஸ்து ப2ல-வ்யாப்தி: கத2ம் ப4வேத் ।**
**ஸ்வப்ரகாச ஸ்வரூபத்வாத் ஸித்3த4த்வாச்ச சிதா3த்மந: ॥ 35**

(ஆத்ம ஜ்ஞான விஷயத்தில்) விருத்தியினால் வியாபிக்கப்படும் தன்மை மாத்திரம் இருக்கட்டும். ஞானரூபனான ஆத்மா ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபனாயும், ப்ரஸித்தனாயும் இருப்பதால் சைதன்யத்தால் வியாபிக்கிறது என்பது எப்படி இருக்கமுடியும்?

[உலகிலுள்ள எந்த ஜடப்பொருளையும் நாம் தெரிந்துகொள்வதற்கு விருத்தி வ்யாப்தி, பல வ்யாப்தி இரண்டும் வேண்டும். அந்தக்கரணம் விஷயமிருக்குமிடம் சென்று விஷயம் முழுவதும் பரவி விஷயாகாரத்தை அடைவது விருத்தி வ்யாப்தி என்பது. சைதன்ய சம்பந்தம் பல வ்யாப்தியாகும். இவற்றில் விருத்தி வ்யாப்தியால் ஆவரணம் (மறைப்பு) நீங்குகிறது. பல வ்யாப்தியால் ஜடமான பொருள் நமக்குத் தெரியவருகிறது. ஆத்மாவை நாம் தெரிந்துகொள்வதற்கு விருத்தி வியாப்திமட்டும் போதும். பல வ்யாப்தி தேவையில்லை. ஏனெனில் ஆத்மாவை நமக்குத் தெரியவொட்டாமல் மறைந்துக்கொண்டிருக்கும் ஆவரணம் நீங்க அந்தக்கரண விருத்தி வ்யாப்தி அவசியம் வேண்டியதுதான். மறைவு நீங்காதவரை ஆத்மா நமக்குத் தெரியாதல்லவா? ஆனாலும் ஆத்மா சைதன்ய ரூபமாய் ஸ்வயம் ப்ரகாசமாய் ப்ரஸித்தமாய் இருப்பதால் வேறொரு சைதன்ய வ்யாப்தி வேண்டியதில்லை. சைதன்யமல்லாத ஜடவஸ்துவைத் தெரிந்துகொள்ளத்தான் சைதன்ய வியாப்தி வேணுமே தவிர, சைதன்யத்தைத் தெரிந்துகொள்ள அது வேண்டாம்.]

**சித்தம் சைதந்ய மாத்ரேண ஸம்யோகா3த் சேதநம் ப4வேத் ।**
**அர்தா2த3ர்தாந்தரே வ்ருத்திர் க3ந்தும் சலதி சாந்தரே ।**
**நிராதா4ரா நிர்விகாரா யா தசா ஸோந்மநீ ஸ்ம்ருதா ॥ 36**

புத்தியானது சுத்த சைதன்யத்யோடு சேருவதினால்தான் அறிவுள்ளதாக ஆகும். புதிய விருத்தியானது ஒரு விஷயத்திலிருந்து வேறு விஷயத்திற்குப் போவதற்காக சலித்துக்கொண்டேயிருக்கிறது. (ஒரு விருத்திக்கும் வேறு விருத்திக்கும்) மத்தியில் எவ்வித விஷயத்தாலும் ஆச்ரயிக்காமல், தான் மாறுதலுமடையாமல் இருக்கும் நிலை எதுவோ அது “உன்மனீ'' (மனஸிற்கு மேலானது) என்று எண்ணப்படுகிறது.

**சித்தம் சிதி3தி ஜாநீயாத் தகார ரஹிதம் யதா3 |**
**தகாரோ விஷயாத்4யாஸோ ஜபாராகோ3 யதா2 மணௌ || 37**

சித்தம், எப்பொழுது. "த" என்ற அக்ஷரம் இல்லாமல் போகிறதோ, அப்பொழுது அதை, "சித்" என்று அறியவும் (சித்தை சித்தமாக ஆக்குகிற) "த" என்ற அக்ஷரம் விஷயத்தோடு ஒன்றாய்த்தோன்றும்படி கலப்பது என்பதைக் குறிக்கும். எப்படி சுத்தமான ஸ்படிக மணியில், ஜபா புஷ்பத்தின் (செம்பருத்திப் பூவின்) வர்ணம் தோன்றுகிறதோ அதே மாதிரி.

[விஷயங்களைப்பற்றிய பல எண்ணங்களாகிய செவ்வண்ணத்தை நீக்கினால் சித்தம் எண்ணமற்ற வண்ணமற்ற சுத்தமான சித்தாக நிற்கும்.]

**ஜ்ஞேய வஸ்து பரித்யாகா3த் ஜ்ஞாநம் திஷ்ட3தி கேவலம் |**
**த்ரிபுடீ க்ஷீணதாமேதி ப்3ரஹ்ம நிர்வாணம் ருச்ச2தி || 38**

அறியப்படும் பதார்த்தத்தை விட்டுவிட்டால் ஞானம், தனித்து நிற்கும். அறிகிற ஞாதா, அறியப்படும் ஞேயம், அறிகிற கிரியையான ஞானம் இம்மூன்றும் நாசமடைந்த நிலையை அடைந்துவிடும். அப்பொழுது, பிரஹ்மானந்தந்தை அடைகிறான்.

**மநோமாத்ரமித3ம் ஸர்வம் தன்மநோ ஜ்ஞாநமாத்ரகம் |**
**அஜ்ஞானம் ப்4ரம இத்யாஹுர் விஜ்ஞாநம் பரமம் பத3ம் || 39**

இந்த (ஜகத்) எல்லாம் மனஸ்தான் (மனத்தில் உண்டானதுதான்). அந்த மனஸ் அறிவேதான் (அறிவிலிருந்து உண்டானதேதான்). அறியாமை பிராந்தி; ஸாக்ஷாத் காரமே மேலான நிலை என்று சொல்கிறார்கள்.

[அறியாமை எனும் அஞ்ஞானத்தில் மனஸையும் ஆத்மாவையும் ஒன்றுபடுத்து வதனால் தான் ஜகத் தோன்றுகிறது. அந்த அறியாமை நீங்கி சுத்தமான ஆத்ம ஸ்வரூப அனுபவமாகிற ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால் அதற்குமேல் உத்தமமான நிலை கிடையாது.]

**அஜ்ஞானம் சாந்யதா2ஜ்ஞானம் மாயாமேதாம் வ3தந்தி தே |**
**ஈச்வரம் மாயிரும் வித்யாத் மாயாதீதம் நிரஞ்ஜநம் || 40**

விபரீதமாகத் தெரிந்துகொள்வதுதான் அஞ்ஞானம் என்பது. இதையே மாயை என்றும் பெரியோர்கள் சொல்கிறார்கள். இந்த மாயையை உடையவரே ஈசுவரன் என்றும், மாயைக்கு அதீதமாயுள்ளது எவ்வித தோஷமுமற்ற சுத்த ப்ரஹ்மம் என்றும் அறியவேண்டும்.

மாயைக்கு உட்பட்டவன் ஜீவன். மாயையோடு கூடி அதைத் தன்வசப்படுத்திக்

கொண்டிருப்பவன், ஜீவ - ஜகத்துக்களை நடத்தும் ஸகுண ப்ரஹ்மமான ஈசுவரன். ஜீவ பேதம் நீங்கி ஜகத் அழிவுபட்டு, மாயையின் ஸம்பந்தமில்லாமலிருப்பது நிர்க்குண ப்ரஹ்மமான சுத்த சைதன்யம்.

**ஸதா3நந்தே3 சிதா3காசே மாயா மேக4ஸ்-தடின் மந: |**
**அஹந்தா க3ர்ஜநம் தத்ர தா4ராஸாரா ஹி வ்ருத்தய: ||** 41

**மஹா மோஹாந்த4காரே (அ)ஸ்மின் தே3வோ வர்ஷதி லீலயா |**
**தஸ்யா வ்ருஷ்டேர்-விராமாய ப்ரபோ3தை4க ஸமீரண: ||** 42

ஸத்தாகவும் ஆனந்தமாகவும் சித்தாகவுமுள்ள ஆகாசத்தில், மாயை என்பது மேகம். மனஸானது மின்னல். அதில் (மேகத்தில்) அஹங்காரம் என்பது கர்ஜனம் (இடி), (புத்தி) விருத்திகள் தான் தாரையாகப் பெய்யும் மழை. இந்த மஹா மோஹமாகிற இருட்டில் தேவன் (ஸ்வயம் ப்ரகாசமான பரமாத்மா) விளையாட்டாகப் பெய்கிறார். அந்த மழை பெய்தல் நிற்பதற்கான ஒரே காற்று ஞானம் தான்.

**ஜ்ஞாநம் த்3ருக்3-த்3ருச்யயோர்-பா4நம் விஜ்ஞாநம் த்3ருச்ய சூந்யதா |**
**ஏகமேவாத்3வயம் ப்ரஹ்ம நேஹ நாநா(அ)ஸ்தி கிஞ்சந: ||** 43

பார்க்கிற சேதனனான ஆத்மாவும் பார்க்கப்படுகிற ஜடமான பிரபஞ்சமும் தனித் தனியே தோன்றுவதே ஞானம். பார்க்கப்படும் ஜடமான பிரபஞ்சம் மறைந்துவிடுவது விஞ்ஞானம். அந்த நிலையில் பார்க்கிறவன் என்ற வியவஹாரமும் இல்லாததினால் பிரஹ்மம் ஒன்றுதான் உண்டு. இந்த பிரஹ்மத்தில் வேற்றுமையானது கொஞ்சமேனும் கிடையாது.

[ஞானம் என்பது ஸாதாரண ஞானம் என்றும் விஞ்ஞானம் என்பது விசேஷ ஆத்ம ஞானம் என்றும் காட்டுகிறார்]

**க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோர்-ஜ்ஞானம் தஜ்-ஜ்ஞாநம் ஞாநமுச்யதே |**
**விஜ்ஞாநம் சோப4யோரைக்யம் க்ஷேத்ரஜ்ஞ பரமாத்மநோ: ||** 44

தேஹாதிகளான க்ஷேத்திரத்தையும் அதையறிகிற க்ஷேத்திரக்ஞனையும் அறிவது எதுவோ அந்த அறிவு ஞானம் என்று சொல்லப்படுகிறது. விஞ்ஞானமோ க்ஷேத்தில் ஞன் பரமாத்மா இவ்விருவருக்குமுள்ள ஐக்கியம்.

[முன் சுலோகத்தில் திருக் (பார்க்கிறவன்) என்று சொல்லியதையே இங்க க்ஷேத்திரக்ஞன் என்றும், திருச்யம் (பார்க்கப்படும் வஸ்து) என்று சொன்னதையே இங்கே க்ஷேத்ரம் என்றும் சொல்லியிருக்கிறார்.]

**பரோக்ஷம் சாஸ்த்ரஜம் ஜ்ஞாநம் விஜ்ஞாநம் சாத்ம-த3ர்சநம் ।**
**ஆத்மநோ ப்3ரஹ்மண: ஸம்யகு3பாதி4-த்3வய வர்ஜிதம் ॥** 45

சாஸ்திராப்யாஸத்தினால் ஏற்பட்டு, பரோக்ஷமாய் (வெளியிலுள்ளதாய்) அறிவது ஞானம். ஆத்மாவினுடையவும், பிரஹ்மத்தினுடையவும் ஆகிய (ஆத்மாவின் உபாதியான அவித்யை, பிரஹ்மத்தின் உபாதியான மாயை ஆகிய) இரண்டு உபாதிகளையும் விலக்கி, (சுத்த சைதன்யஸ்வரூபமான) ஆத்மாவை ஸாக்ஷாத்தாக பார்ப்பது, விஞ்ஞானம்.

**தவமர்த2 விஷயம் ஜ்ஞாநம் விஜ்ஞாநம் தத்பதா3ரச்ரயம் ।**
**பத3யோரைக்ய-போ3த4ஸ்து ஜ்ஞான விஜ்ஞான ஸம்ஜ்ஞிதம் ॥** 46

நீ என்கிற பதத்தின் அர்த்தமான ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்வது ஞானம். அது என்கிற பதத்தின் அர்த்தமான ஈசுவரஸ்வருபத்தைத்தெரிந்து கொள்வது விஞ்ஞானம். (நீ என்கிற பதம். அது என்கிற பதம்) இவ்விரண்டிலும் குறிக்கப்படும் வஸ்து ஒன்றுதான் என்று உணருவதே ஞான விஞ்ஞானம் எனப்படும்.

**ஆத்மாநாத்மவிவேகம் ச ஜ்ஞாநமாஹுர் மநீஷிண: ।**
**அஜ்ஞானம் சாந்யதா2 லோகே விஜ்ஞாநம் தந்மயம் ஜக3த் ॥** 47

ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்து அறிவதே ஞானம் என்று அறிவாளிகள் சொல்வார்கள். உலகத்தில் அஞ்ஞானம் என்பது மாற்றி அறிவது (அதாவது ஆத்மா வையும் அனாத்மாவையும் பிரிக்காமல் ஒன்றாகவே கலந்து அறிவது) ஆகும். பிரபஞ்ச. மானது அதனாலேயே (அஞ்ஞானத்தினாலேயே) நிறைந்தது என்று அறிவது விஞ்ஞானம் எனப்படும்.

**அந்வய வ்யதிரேகாப்4யாம் ஸர்வத்ரைகம் ப்ரபச்யதி ।**
**யத் தத் து வ்ருத்திஜம் ஜ்ஞாநம் விஜ்ஞாநம் ஞாநமாத்ரகம் ॥** 48

எல்லாவிடத்திலும் அன்வயம் மூலமாயும் (உடன்பாட்டாலும்) வியதிரேகம் மூலமாயும் (எதிர்மறையாலும்) ஒன்றாகவே இருப்பதை எது நன்கு அறிகிறதோ, அதுவே விருத்தியினால் உண்டான ஞானம். சுத்தமான அறிவாகவே இருப்பது விஞ்ஞானம்.

**அஜ்ஞாந த்வம்ஸகம் ஜ்ஞாநம் விஜ்ஞாநம் சோப4யாத்மகம் ।**
**ஜ்ஞாநவிஜ்ஞாந நிஷ்டேயம் தத்ஸத் ப்3ரஹ்மணி சார்ப்பணம் ॥** 49

அஞ்ஜானத்தைப் போக்கடிப்பது ஞானம். விஞ்ஞானமோ அஜ்ஞானம், ஞானம் ஆக இரண்டாகவும் இருக்கும் தன்மையுள்ளது. அதுவாகவும் ஸத்தாகவுமுள்ள

பிரஹ்மத்தினிடத்தில் அஜ்ஞானம், ஞானம், இரண்டையும் லயப்படுத்திவிடுவதுதான் ஞான விஜ்ஞானத்தில் நிலைத்தல் ஆகும்.

**போ$^4$க்தா ஸத்த்வகு$^3$ண: சுத்$^3$தோ$^4$ போ$^4$கா$^3$நாம் ஸாத$^4$நம் ரஜ: ।**
**போக்$^3$யம் தமோகுண: ப்ராஹுராத்மா சைஷாம் ப்ரகாசக: ॥** 50

அனுபவிக்கிறவன் சுத்தமான ஸத்வகுண ஸுகதுக்கங்களை அனுபவிக்க ஸாதனம்தான், ரஜோகுணம். தமோ குணமானது அனுபவிக்கப்படும் பதார்த்தம். இவைகளையெல்லாம் பிரகாசிக்கும்படி செய்கிறது ஆத்மா என்று சொல்கிறார்கள்.

இனி மற்ற மூன்று ஆச்ரமங்களையும் ஸந்நியாஸியான ஞானமார்க்கத் தினனின் ஆசாரமாகக்காட்டுகிறார்.

**ப்$^3$ரஹ்மாத்$^4$யயந ஸம்யுக்தோ ப்ரஹ்மசர்யாரத: ஸதா$^3$ ।**
**ஸர்வம் ப்$^3$ரஹ்மேதி யோ வேத$^3$ ப்$^3$ரஹ்மசாரீஸ உச்யதே ॥** 51

எப்பொழுதும் ப்ரஹ்மசர்ய நியமத்துடன் வேதத்தை அத்யயனம் செய்பவன் ப்ரஹ்மசாரி எனப்படுவான். எல்லாம் ப்ரஹ்மம் என்று அறிந்த ஞானியும் ப்ரஹ்மத்தை உபதேசிக்கும் உபநிஷத்தை ஜபித்துக்கொண்டு ப்ரஹ்மசர்ய நியமத்துடனிருப்பதால் ப்ரஹ்மசாரி எனப்படுகிறான்.

**க்$^3$ருஹஸ்தோ$^3$ கு$^3$ணமத்$^4$யஸ்த$^2$: சரீரம் க்$^3$ருஹமுச்யதே ।**
**கு$^3$ணா: குர்வந்தி கர்மாணி நாஹம் கர்தேதி பு$^3$த்$^3$தி$^4$மான் ॥** 52

ஞானிக்கு சரீரமே வீடு என்று சொல்லப்படுகிறது. குணங்களின் நடுவிலிருந்து ண்டு, (ஆனால்) "கர்மாக்களை, குணங்கள் தான் செய்கின்றன, நான் செய்கிறவன் அல்ல", என்று அறிந்தவன் கிருஹஸ்தன் ஆகிறான்.

**கிமுக்$^3$ரைச்ச தபோபி$^4$: ஸ்யாத் யஸ்ய ஜ்ஞாநமயம் தப: ।**
**ஹர்ஷாமர்ஷ-விநிர்முக்தோ வாநப்ரஸ்த$^2$: ஸ உச்யதே ॥** 53

எவனுக்கு ஞானமயமான தபஸ் இருக்கிறதோ, அவனுக்கு உக்கிரமான தபஸ்களினால் என்ன பிரயோஜனம்? ஸந்தோஷம், வெறுப்பு இவைகளிலிருந்த நன்கு விடுபட்டவனே வானப்ரஸ்தன் என்று சொல்லப்படுகிறான்.

**ஸ க்ருஹீ யோ க்ருஹாதீத: சரீரம் க்ருஹமுச்யதே ।** 54

எவன் கிருஹத்திற்கு மேல்பட்டவனோ அவன்தான் கிருஹத்திற்கு யஜமானன். சரீரமே கிருஹம் என்று சொல்லப்படுகிறது.

[வீட்டு யஜமானன் வீட்டை "தான்" என்று நினைப்பது கிடையாது. வீடு வேறு, தான் வேறு, என்றே நினைப்பான். அப்படியே ஆத்ம ஞானி சரீரத்தில் ஆத்மா வென்ற எண்ணம் வைக்காமல், தான் அதைவிட வேறு அதற்கு அதீதமானவன் என்றே உணர்ந்தவன். ஆகையால் சரீரத்திற்குரிய வர்ணாசிரமங்கள் தனக்குச் சேர்ந்தவை யலல என்ற உணர்ச்சி இருக்கும். அவனே நான்கு ஆச்ரமங்களுக்கும் மேம்பட்ட அதிவர்ணாசிரமியும் ஆவான்].

**ஸதா[3]சாரமிமம் நித்யம் யோ(அ)நுஸந்த[3]த[4]தே பு[3]த[4]: |**
**ஸம்ஸார ஸாக[3]ராத் சீக்ர[4]ம் ஸ முக்தோ நாத்ர ஸம்சய: ||** 55

இந்த ஸதாசாரத்தை எந்த அறிவாளி எப்பொழுதும் அனுஸந்தானம் செய்கிறானோ (ஈடுபாட்டுடன் பின்பற்றுகிறானோ) அவன் சீக்கிரமாக ஸம்ஸார சமுத்திரத்தி லருந்து விடுபடுகிறான். இவ்விஷயத்தில் சந்தேஹமில்லை.

